சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்நம் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் அஞ்செழுத்தெங் கே.

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

திருஞானசம்பந்தர்



அப்பர்



சுந்தரர்



மாணிக்கவாசகர்



திருவள்ளுவராண்டு 2038
ஆடி - சூலை 2007
ரூ. 5.00

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :


*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :
website : www.kundrakudiadheenam.org.



ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | | | |
|---|---|---|---|
| திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) | | மாதம் | : ஆடி |
| மலர் : 21 | | இதழ் | : 7 |




# சமயம் மனித நேயத்தை வளர்க்க வேண்டும்

சங்க காலத்தில் சமய நம்பிக்கை இருந்தது. கடவுள் நெறி வலியுறுத்திக் கூறப்படவில்லை. எனினும் ஆங்காங்கு கூறப்படுகின்றது.

ஏழாம் நூற்றாண்டிலிருந்து பக்தி - சமய இலக்கியத்தின் எழுச்சிக் காலம் என்று கூறலாம். ஏழாம் நூற்றாண்டில் தொடங்குகின்ற போராட்டம் வெறும் சமய வழிப் போராட்டம் அன்று; தமிழர்களின் பண்பாட்டிற்கும் நாகரிகத்திற்கும் கலாசாரத்திற்கும் விடுக்கப்பட்ட அறைகூவல்.

சேக்கிழார், சமணர்களுக்கும் சம்பந்தப் பெருமானுக்கும் நடக்க இருந்த சொற்போரை,

*"செழுந்தமிழ் வழக்கு அயல் வழக்கின் துறை வெல்ல"*

இருக்கின்றது என்று வருணிப்பார். ஆக ஏழாம் நூற்றாண்டில் தொடங்கி சேக்கிழாரின் காலம்வரை உள்ள திருமுறைக் காலம் வெறும் சமய எழுச்சிக் காலம் மட்டும் அன்று; சமயத்தைப் புனருத்தாரணம் செய்த வேள்விக் காலம். சேக்கிழாரின் திருமுறை சமூக மேடு பள்ளங்களைச் சரி செய்கிறது. திருக்கோவில் பூசனை, சீலமுடைய - அன்புடைய பக்தியுணர்வுடைய எவரும் செய்யலாம் என்ற புரட்சியை இன்று மக்களின் அரசும் இருபதாம் நூற்றாண்டுப் புரட்சிச் சமூகமும் செய்ய முடியாத சாதனையை நிகழ்த்திக் காட்டுகிறது. தீண்டாமையை இல்லாது ஒழிக்கவும் ஏழை - பணக்காரர் நிறைந்த சமூகத்தை எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கும் பொதுமைச்

சமுதாயமாக்கவும் போராடுகின்றது; துறவிகள் நோற்கும் தவத்தை இல்லறத்தில் நோற்கமுடியும் என்ற புது நெறி காட்டுகின்றது; இதுவரை தோன்றியுள்ள உலக நீதிமன்றங்கள் கூறாத தீர்ப்பை ஆளும் அரசுக்குக் கூறியது. பூசலாரின் மனக்கோவிலில் இறைவனை எழுந்தருளச் செய்தது. இறைவனை வான் பழித்து; மண் நடந்து அடியவர்களைத் தேடி ஆட்கொள்ளச் செய்தது; அடியார்க்கு அடியனாய் எளியார்க்கு எளியனாய் அண்டர்நாயகன் அடியவர்களின் அன்புக்கு ஆட்படும் அருமையை விவரித்தது நேற்றைய சமயம். நேற்றுச் சமயம் வாழும் மானிடத்தின் மூச்சுக் காற்று; ஒழுகலாறு. சமய வாழ்க்கை ஊனும் உயிரும் கலந்து பிரிக்கமுடியாத வாழ்க்கை. அரசன் தழுவும் மதமே, மக்களின் மதம் என்ற முடியாட்சிக் காலத்தில் சமயம் எளிமையாக இருந்தது. கோவிலைத் தழுவிக் குடிகளும் குடிகளைத் தழுவிக் கோவிலும் அமைந்திருந்தன.

நாளை எப்படி சமய உலகம் இருக்கவேண்டும்? சமயம் மனிதனை உழைக்காமல் செல்வன் ஆக்க அன்று; அவனை வாழ்வாங்கு வாழச்செய்து வாழும் நிலையை உயர்த்தத்தான். சமயம் மீண்டும் தொண்டு நெறியின் உறைவிடமாக மாறவேண்டும். மானுட சமூகத்தின் மையங்களாகத் திருக்கோவில்கள், சமய நிறுவனங்கள் மாறவேண்டும்.

*"நடமாடக் கோயில் நம்பற்கொன் றீயிற்*
*படமாடக் கோயில் பகவற்க தாமே"*

என்ற நெறியில் நடமாடும் மனித சமூகத்திற்குத் தொண்டு செய்ய வேண்டும். மக்கள் திருக்கோவிற் பணிக்கு என்று தனி நேரம் - உழைப்பு நேரம் ஒதுக்கவேண்டும். ஊன் உருக்கும் உயிர் உருக்கும் தேனினும் இனிய தீந்தமிழ் மறைகள் திருக்கோவில்களில் முழங்க வேண்டும். அன்பை, நட்பை, காதலை, பண்பாட்டை கலாசாரத்தை வளர்க்கும் மையங்களாகச் சமய உலகம் மாறவேண்டும். நாத்திகம் நஞ்சு! நாகரிகப் பண்பாட்டு வாழ்க்கைக்கு ஏற்றதன்று; அதேபொழுது கடவுள் நம்பிக்கை மனித நேயத்திற்கு மாறாக இருப்பின் நாத்திகத்தினும் கொடிது.

*"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ*
*அன்புடைய மாமனும் மாமியும் நீ*
*ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ*
*ஒரு குலமும் சுற்றமும் ஓருரும் நீ"*

என்று சகல உறவுகளும் கலந்த உயிர்ப்பு உறவினைச் சமய வாழ்க்கை கற்றுத்தரவேண்டும். விலங்கு உணர்விலிருந்து மனித சமூகத்தை விடுவித்துத் தேவநிலைக்கு உயர்த்துவதாய், வழிகாட்டுவதாய் நாளைய சமய உலகம் அமையவேண்டும். நேற்று, சமயம் அரசர்களின் சமயமாய் இருந்த காலத்தில்கூட மக்களுக்குரியதாய், மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்திருந்தது. இன்று சமயத்திற்கும் மக்களுக்கும் நீண்ட இடைவெளி. இன்னும் சிலரின் சமய நம்பிக்கை கடவுள் நாம் விரும்பியதைத் தரும் பரிசுச் சீட்டு என்று எண்ணுகின்ற மனோபாவம். இந்நிலை மாறிட சமயத்துறையில் மாபெரும் புனருத்தாரணம் அவசியம். ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தவற்றைக்கூட நினைத்துப் பார்க்க இயலாத நிலை. எனவே சமயத்துறையில் மார்ட்டின் லூதர் கிறித்துவ சமயத்தைப் புனருத்தாரணம் செய்ததைப் போல, புனருத்தாரணப் பணிகள், இளைய தலைமுறைக்குக் காத்திருக்கின்றன. இன்று மதங்களுக்குள் சண்டைகள். வேறுபாடுகளைப் பெரிதுபடுத்தி, முரண்பாடுகளை உருவாக்கித் தமக்குள் முட்டி மோதி அழிகின்றனர்.

நாளை சமயம் எப்படி இருக்க வேண்டும்? சமயம், சமூகத்திற்கே என்ற திசைநோக்கி நகரவேண்டும். நோயை ஆற்றாது பயன் இல்லை. நெறிப்படுத்தாத சமயம், சமயமும் அன்று; பண்பாட்டை, கலாச்சாரத்தை, நாகரிகத்தைப் பேணிக் காக்கும் நெறியே சமயம்! நாளைய சமயம் மனித நேயத்தை வளர்க்க வேண்டும்.

தொண்டின் உறைவிடமாக, நன்நெறி போற்றும் வகையில் நாளைய சமய உலகம் அமைய வேண்டும்!

*நாளை சமய உலகின் புனருத்தாரணம் அன்பால்*
*வழிபடுவதே ஆகும்.*
*நாளை சமயம், மனிதகுலம் உய்யும் நெறி காட்டும் .*
*திசைநோக்கி நகரட்டும்*

வான்முகில் வாழாது பெய்து வளம் பெருகி, மேன்மைகொள் சமய நீதி உலகம் எல்லாம் விளங்கும் திசை நோக்கிப் பயணம் செய்வோம்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 77. படைமாட்சி

நாட்டினை உள்நாட்டுக் கலகங்களிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்து வரும் படையெடுப்புகளிலிருந்தும் பாதுகாத்துக் கொள்ள மாட்சிமைப்பட்ட படை தேவை.

*உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்*
*வெறுக்கையுள் எல்லாம் தலை* (761)

மாட்சிமைக்குரிய உறுப்புக்களுடன் அமைந்து துன்பம் உறுதலுக்கு அஞ்சாது விளங்கி வெல்லும் படை, அரசனின் செல்வங்களுள் எல்லாம் தலையானது.

படையின் உறுப்புக்கள் : காலாட்படை, யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை ஆகியன.

இன்று விமானப்படை, கப்பற்படை ஆகியவற்றையும் சேர்த்துப் பொருள் கொள்ளலாம்.

போர் வீரன் வாழ்வு என்பது துன்பத்தை எதிர் கொள்வதேயாம். ஆதலால், "ஊறுஅஞ்சாது" என்றார்.

செல்வத்தையும் ஆதிபத்தியத்தையும் காப்பாற்றினாலே நாடாள்பவர் என்ற தகுதி நிலைப்படும். ஆதலால் தலையாய செல்வம் என்றார்.

*உலைவிடத்து ஊறுஅஞ்சா வன்கண் தொலைவிடத்துத்*
*தொல்படைக்கு அல்லால் அரிது.* (762)

அரசனுக்குத் தோல்வி வரக்கூடிய தருணத்திலும் துன்பத்திற்கு அஞ்சாது, போரின்கண் நின்று போரிடும் இயல்பு, பழைமையான படைகளுக்கே உரியது.

"பழைமை " காரணமாக நன்றிக் கடப்பாட்டுணர்வுடன் மரணத்தறுவாயிலும் நின்று போரிடுவர் என்பது கருத்து.

பலகால் பழகுதல், உறவினைக் கால் கொள்ளச் செய்கிறது.

*ஒலித்தக்கால் என்ஆம் உவரி எலிப்பகை*
*நாகம் உயிர்ப்பக் கெடும்.* (763)

எலிகள் படைபோலத் திரண்டு நாகத்தின் முன் ஒலித்து என்னாவது? நாகம் மூச்சுவிட்டாலே எலிப்படை கெடும்.

கூட்டம் மட்டும் பயனில்லை. வலிமை தேவை என்பது கருத்து.

*அழிவுஇன்று அறைபோகாது ஆகி வழிவந்த*
*வன்கண் அதுவே படை .* (764)

அரசனுக்கு, அழிவு வந்தபோது தோற்று ஓடாது பகைவரால் அழிக்கப்படாது, தூய வழி வந்த பேராண்மையை உடையதே படை.

"துன்பத்தின் கண்ணும் அழிவின்கண்ணும் துணை நிற்பதே" அறம், மரபு.

*கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்*
*ஆற்றல் அதுவே படை.* (765)

கூற்றுவனே வெகுண்டு மேலெதிர்ந்து வந்தாலும் அஞ்சாமல் கூடி எதிர்நின்று போர் செய்யும் ஆற்றலுடையதே படை.

மரணத்திலும் கொடிய துன்பம் ஒன்றும் இல்லை. அதற்கு அஞ்சாது நிற்பதே வீரம் என்பதுணர்த்தியது.

*மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்*
*எனநான்கே ஏமம் படைக்கு.* (766)

அசைவிலா வீரமும் மானம் போற்றும் வீரமும், பிணங்கள் மீதும் நடந்து போரிடும் துணிவும், அரசரால் தேற்றப்படுதலும் ஆகிய நான்கும் படைக்கு அரணாகும். வெற்றிகளைப் பெற்றுப் பெருமையைக் காப்பாற்றிக் கொள்வதை மானம் என்றார். போர்க்களத்தில் துன்பத்தில் தள்ளப்படுபவர்கள் தங்களைத் தாங்களே தேற்றிக் கொள்ளாதவாறு, அரசன் தேற்றவேண்டும்.

*தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த*
*போர்தாங்கும் தன்மை அறிந்து.* (767)

தம்மேல் வந்த பகையினை விலக்கி மேற்செல்லும் தன்மையறிந்து தார்மாலை தாங்கி மேற்செல்வது தானைத் தலைவனின் கடமை.

தன்னுடைய நாட்டின் மாலை தாழாது தாங்கித் தம்மேல் வந்த பகையைத் தாங்கி வெற்றி கொண்டு மேற்செல்வது தானைத் தலைவனின் கடமை என்றும் பொருள் கொள்ளலாம்.

*அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை*
*படைத்தகையால் பாடு பெறும்.* (768)

பகை மேற்செல்லும் ஆற்றலும் பகை தம்மேல் வரும்பொழுது பொறுத்திடும் தகுதியும் இல்லையானாலும் தம் படைத் தோற்றத்தாலேயே மாற்றாரின் பகைப்படை படும்.

எடுப்பான தோற்றமும் அணிவகுப்பும் பகையை அச்சுறுத்தி வெற்றிகொளத் துணை செய்யும்.

*சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்*
*இல்லாயின் வெல்லும் படை.* (769)

படைக்குச் சின்னப் புத்தியும், நீங்காத பிணக்கும், வறுமையும் இல்லையாயின் அப்படை பகைப்படையை வெல்லும்.

"சின்னப்புத்தி" பிணக்குகளுக்குக் காரணம். விரிவான மனப்பான்மையில்லையெனில் தோன்றிய பிணக்கு அகலுவதில்லை. இதனால் படைக்குள்ளேயே கழுத்தறுப்புக்கள் நிலவும், தோற்கவும் வாய்ப்புண்டு.

"வறுமை" நின்றழிக்கும் நோய். வறுமை எந்த ஒரு பெரிய காரியத்தையும் செய்யவிடாது. ஆதலால் படை வறுமையால் தோற்கும்.

*நிலைமக்கள் சால உடைத்துஎனினும் தானை*
*தலைமக்கள் இல்வழி இல்.* (770)

போரின்கண் நின்று போராடக்கூடிய வீரர் மிகப்பலரைப் பெற்றிருந்தாலும் போரினை வழி நடத்தும் தலைவன் இல்லாதபோது பயனில்லை.

போர்க்குணம் வேறு, வழிநடத்தும் திறன் வேறு என்றவாறு.

*(தொடரும்)*

# நாத்திகமும் ஆத்திகமும்

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

இன்று உலகம் முழுவதும் ஆத்திகமும் பரவி வளர்கிறது; வளர்ந்துவரும் ஆத்திகத்திற்கு ஈடு கொடுக்கும் வகையில் நாத்திகமும் வளர்ந்து வருகிறது. ஆத்திகம் - நாத்திகம் இவற்றிற்கிடையே என்ன வேறுபாடு? என்ன பயன்? என்றெல்லாம் ஆராய்வது இன்றைய தலைமுறைக்கு வழிகாட்ட உதவும். ஆத்திகம் - நாத்திகம் ஆகிய இரண்டு கொள்கைகளுக்கும் கடவுளுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. ஆத்திகர் என்றால் "கடவுள் நம்பிக்கை உடையவர்" என்று பொருள் கொள்ளக்கூடாது. அப்படிப் பொருள் கொள்ளக்கூடிய ஒரு பொய்ம்மையை ஆத்திகர்கள் என்று தம்மை இனங்காட்டிக் கொள்பவர்கள் தோற்றுவித்துவிட்டனர். உண்மை அதுவன்று. ஆத்திகம் என்பது கடவுள் நம்பிக்கையுடைய கொள்கையாக இருந்தால் கடவுள் நம்பிக்கையுடைய இசுலாமிய சமயத்தை எதிர்ப்பது ஏன்? மசூதியை இடிப்பது ஏன்? கிறித்தவ சமயத்தை எதிர்ப்பது ஏன்? கிறித்தவர்களை வெறுப்பது ஏன்? கிறித்தவ சர்ச்சுகளை இடிப்பது ஏன்? கடவுள் ஒருவர் தானே! அவர் தானே எல்லாருக்கும் கடவுள்! "ஒன்று பரம்பொருள்" என்ற கொள்கை பொய்யா? கடவுளர் பலரா? தேவர்கள் எல்லாரும் கடவுளரா? "பூசுரர்" என்ற பூதேவர்களும் கடவுள்களா? இல்லை, இல்லை! இன்று ஆத்திகர்கள் என்பவர்களுக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை இருக்கிறதா என்பது ஆய்வுக்குரிய செய்தி. ஆனால், ஒன்று உண்மை. சாத்திரங்கள் சடங்குகளில் நம்பிக்கை இருக்கிறது. சாத்திரங்கள் கற்பித்த வருணாசிரமத்தில் நம்பிக்கை இருக்கிறது; வினைகளில் நம்பிக்கை இருக்கிறது. பணக்காரன் - ஏழை ஏற்பாடு கடவுள் ஏற்பாடு. பூர்வ ஜன்ம புண்ணிய பலாபலன் என்ற கொள்கையில் நம்பிக்கை இருக்கிறது. இவைகளைக் காப்பாற்றி மனித வர்க்கத்தில் தீண்டாமையையும் சாதிகளையும் நிலையாகக் காப்பாற்றிச் சுரண்டுகிற சமுதாயத்திற்குப் பாதுகாவலாக அமைந்து தம்மை உயர் சாதியினராக, புரோகித சாதியினராக உயர்த்திக் கொள்வதில் ஆத்திகர்களுக்கு அக்கறை.

நாத்திகர்கள் இதற்கு நேர் எதிரிடையானவர்கள்! தலைவர் பெரியார் "நான் கடவுளை நம்பவில்லை! ஏன்? நான் அதைக் கண்டதில்லை! ஆனால் கடவுள் பெயரால் மனித குலத்திற்கு இழைக்கப்படும் அநியாயங்களைக் காண்கிறேன். இன்று ஏமாற்றுக்காரர்களுக்குக் "கடவுள்" ஒரு சாதனம்; கருவி! எனவே, நான் கடவுளைப் பற்றிக் கவலைப்படவில்லை! எனக்குக் கவலையெல்லாம் மனிதனைப் பற்றித்தான்! குறிப்பாகத் தமிழனைப் பற்றியேதான்!" என்றார். ஆரிய வேத மத சாத்திரங்களை ஆராய்பவர்களை நாத்திகர்கள் என்று பட்டம் கட்டித் துன்புறுத்தினார்கள் என்பதை இரணியன் வரலாறு காட்டுகிறது. மத புராணங்களில் - இதிகாசங்களில் கூறப்படும் பிறர் மனைவியைக் கூடிய கயவர்களுக்குக் கூட இராவணனுக்குக் கிடைத்த அளவு கண்டனம், தூற்றுதல் இல்லை! இராவணன் சீதையைத் தீண்டக்கூட இல்லை. ஆனால், இராவணனுக்கு நாடு தழுவிய பழி தூற்றல் ஏன்? இராவணன் உயர் சாதியன் அல்லன். முனிவன் அல்ல. இதனால், நமக்குப் புரிவது நாத்திகம் என்பதற்கும் கடவுளுக்கும் சம்பந்தமில்லை என்பது தான்! நாத்திகம் என்பது ஆரிய சாத்திரங்களை கோட்பாடுகளை எதிர்ப்பவர்கள் மீது சூட்டப்படும் பட்டம்! கடவுள் மறுப்பாளன் என்று பறை சாற்றுவார்கள். உண்மையில் நாத்திகத்திற்கும் கடவுளுக்கும் சம்பந்தம் இல்லை.

பிறப்பில் வேற்றுமைகள்! குலம் கோத்திர வேறுபாடுகள் மனித குலத்தினை உருக்குலைக்கும் கொள்கைகள்! கடவுளுக்கே சாதி! இன்ன சாதியினர்தான் கடவுளைப் பூசிக்கலாம். சோறு படைக்கலாம்! பணக்காரன் - ஏழை ஏற்பாடுகள் சுரண்டும் வர்க்கத்திற்குப் பாதுகாப்பு! புரோகிதம், மதம் இவற்றிக்குத் தலைமை தாங்க உயர் சாதியினருக்கே உரிமை! சமஸ்கிருதமே தேவ மொழி! தமிழ், சூத்திர மொழி! தமிழில் வழிபாடு கூடாது! தமிழனும் பூசனை செய்யக்கூடாது! இவற்றுக்கு மாறானவையெல்லாம் நாத்திகத்தின் கொள்கைகள், கோட்பாடுகள்!

இன்று நம்மை ஆளுவது மனிதர்கள் அல்ல. அரசியல் சட்டமே ஆளுகிறது. நம்முடைய அரசியல் சட்டம் சமயச் சார்பற்ற தன்மையை விவரிக்கிறது. ஆனால் நாட்டை ஆள்பவர்கள் சமயச் சார்பற்ற தன்மையை மறந்து பல ஆண்டுகளாகிவிட்டன. ஏன்? நமது நாட்டுக் காவல்துறையினரும் படைவீரர்களும் ராம நாம பஜனையில் ஈடுபட்டுத் தம்மையே மறந்து நின்று, பாபர் மசூதியை இடிப்பதைப் பார்த்துக்

கொண்டுதானே இருந்தார்கள். இராமர் மீதிருந்த பக்தி, பாபர் மசூதி வேட்டு! இது எப்படி சமயச் சார்பற்ற தன்மையாகும்?

அடுத்து, நமது அரசியல் சட்டம் "ஜனநாயக சோஷலிசக் குடியரசு" என்று பேசுகிறது. இன்று இந்தியாவில் எங்கே சோஷலிசம் இருக்கிறது? நாளும் பணக்காரர்கள் "புனல் நிறைந்த தொட்டிகள் ஆகி" வருகிறார்கள். "பொத்தல் இலைகளைப் போல" மக்கள் ஏழைகள் ஆகிவருகிறார்கள். கருப்புப் பணம் குவிகிறது. அந்தக் கருப்புப் பணம் தேர்தலைப் பணச்சந்தையாக மாற்றி வருகிறது. ஏழைகளுக்குக் கிடைப்பதெல்லாம் ஜீவனாம்சம்! இலவசம்! "குடியரசு" என்று பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. "ஜனநாயகக் குடியரசு" என்று பிரகடனம் செய்கிறார்கள். ஜனநாயகம் எங்கு இருக்கிறது? ஆளுங்கட்சித் தலைவர், பாராளுமன்றத் தலைவர் என்று இருந்த மரபை மாற்றிவிட்டார்கள்! இன்று ஜனநாயகப் போக்கில் தனி மனிதர் வழிபாடே நடந்து வருகிறது. அரசியல் விருப்பு - வெறுப்புக்கள், கோபங்கள், கட்சித் தாவல்கள் எல்லாம் நடைபெறுகின்றன. இதனால் தான் தலைவர் பெரியார் ஜனநாயகத்தை நம்ப மறுத்தார்; கேலி செய்தார்! நாட்டைக் கெடுக்கும் ஐந்து பேய்களை மக்களுக்கு அறிமுகப்படுத்தி மக்களை எதிர்க்கும்படி தூண்டினார். அந்த ஐந்து பேய்கள் எவை? கடவுள், மதம், ஜனநாயகம், பத்திரிகை, திரைப்படம் ஆகையவையேயாம்! இவை மக்களிடம் இடம் பெற்றவை. மக்களுக்குத் தேவையானவையும் கூட. ஆனால் - இவற்றை நன்னெறியில் பயன்படுத்தாது போனால் - தலைவர் பெரியார் அவர்கள் மனித சமுதாயத்தின் பால் கொண்ட பரிவை நிறைவேற்ற இயலாமல் போகும்.

அடிகளார் நூல்வரிசை (தொகுதி - 13) பக்கம் 486-490

---

மாசில்லாத எண்ணத்தோடு, சீலமுடைய - மிக்குயர்ந்த நம்நெறியை மக்களிடத்து பரப்ப முற்பட வேண்டும். இதனால் வருகின்ற இன்ப துன்பங்களைப் பற்றிக் கவலை கொள்ளக்கூடாது.

- அருள்நெறித்தந்தை

---

"*கம்பன் என்றொரு மானிடன்*" - தொடர் அடுத்த இதழில் வெளிவரும்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். **மு. நளினி**, டாக்டர். **இரா. கலைக்கோவன்**)

தேனாற்றுநாயகர் கோயிலில் இருந்த ஆளுடைய பிள்ளையாருக்கு நியமத்துக் கண்டன் அமுதகண்டன் என்பார் சில குறிப்பிட்ட நிலங்களின் வரிகளைக் கொடையாக அளித்ததைக் குறிக்கும் கல்வெட்டு பெரிதும் சிதைந்துள்ளது. ஆளுடைய பிள்ளையார் என்ற பெயர் பொதுவாக ஞானசம்பந்தரைக் குறிப்பதாகும். இக்கல்வெட்டில் இப்பெயர் யாரைக் குறிக்கப் பயன்பட்டதென்பதை அறியக்கூடவில்லை. குன்றக்குடியிலிருந்த காளையூர் தாலன் திருமடத்திற்கு நியமப்பற்று நாட்டவர் இறையிலி செய்த நிலத்தைக் குடிநீங்காக் காணியாக மடப்புறமாக்கித் தந்ததைக் கூறும் கல்வெட்டும், "பிள்ளையார்க்கு" என்ற சொல்லைக் கொண்டுள்ளது. இக்கல்வெட்டுக் குறிக்கும் பிள்ளையார் யாரென்பதும் தெரியவில்லை.

தரிசாய்க் கிடந்த தேவதான நிலத்தை வளப்படுத்தித் தம்பிக்கு நல்ல ஆவுடையானான எண்டிசை மீகாமப் பல்லவராயருக்குக் குடிநீங்காத் தேவதானமாக உழும் உரிமை தந்து, நிலங்களின் தன்மை, விளைவுக்கேற்ப அவர் கோயிலுக்குத் தரவேண்டிய விளைபொருட்களின் அளவையும் குறிப்பிட்டுத் தேனாற்றுநாயகர் கோயில் ஸ்ரீருத்ர ஸ்ரீமாகேசுவர ஸ்ரீகார்யம் செய்வார் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தமொன்றைச் சடையவர்மர் ஸ்ரீவல்லபரின் முப்பத்திரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டின் வழி அறிகிறோம். இந்த ஒப்பந்தம் கல்வெட்டில், "பிடிபாடு" என்றழைக்கப்படுகிறது. இந்தப் பிடிபாட்டை எழுதியவராக குலசேகர பட்டன் குறிக்கப்படுகிறார்.

கி.பி. 1559 தைத்திங்கள் இருபத்தோராம் நாள் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டொன்று, இக்கோயில் பெருமண்டபத் திருப்பணி பற்றிப் பேசுகிறது.[54] இராகுத்தமிண்டன், சூரைக்குடியரசு என்ற சிறப்புப் பெயர்களுடன் விசையாலைய தேவர் குறிக்கப்படுகிறார். கல்வெட்டுச் சிதைவால் முழுச் செய்தியையும் அறியக்கூடவில்லை.

முருகன் கோயிலைப்பற்றி மூன்று கல்வெட்டுகள் பேசுகின்றன. இவற்றுள் ஒன்று இக்கோயில் இளைய நாயனாரின் பல்வேறுபட்ட படையல்களுக்காகச் சொக்க நாராயணனான விசையாலையர், இறையிலி நிலமொன்றைப் பழந் தேவதான நிலமொன்றிற்கு மாற்றாகக் கொடுத்ததைக் கூறுகிறது. சடையவர்மர் வீரபாண்டியரின் இருபதாம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டுள்ள இக்கல்வெட்டே இக்கோயில் ப்றறிப் பேசும் காலத்தால் முற்பட்ட கல்வெட்டாகும்.[55]

கி.பி. 1484, 1515இல் வெட்டப்பட்டுள்ள இரணவீரப் பெருமாள் காங்கேயரின் இரண்டு கல்வெட்டுகளுள் முதலாவது, பெரும்பற்றப் புலியூர் மேற்குத் தெருவிலுள்ள திருவெல்லைக் காவலன் திருமடத்து வசிக்கும் பிக்ஷா மடத்துச் சந்தானம் திருப்புனவாசல் முதலியாருக்குப் புதுவூர், ஆனைமங்கலம் எனும் ஊர்களைக் காங்கேயர் இறையிலிக் கொடையாக வழங்கியதைச் சொல்கிறது. கல்வெட்டில் முதலியார் காங்கேயரின் குருவாகச் சுட்டப்படுகிறார். இரண்டாம் கல்வெட்டுத் திருப்பள்ளி எழுச்சியின்போது இளைய நாயனாருக்கு வழங்கப்படும் பல்வேறு படையல்களுக்காக இரவிகுலமாணிக்க நல்லூரான தயன்குடி வயலில் நிலமளித்ததைக் கூறுகிறது.

தேனாற்றுநாதர் திருமுன்னிலுள்ள மாறவர்மர் சுந்தரபாண்டியரின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுப் பெரிய கோட்டையில் ஏற்பட்ட கலகமொன்றில் உயிர் துறந்த நாகதேவனான பகைச்சவர் காலப் பல்லப் பல்லவதரையன் நினைவாகப் புவனகங்கன் என்பார் இக்கோயில் வளாகத்தில் எழுந்தருளச் செய்த சுப்பிரமணியப் பிள்ளையாரின் ப்ல்வேறு படையல்களுக்காக இவ்இறைவனுக்குரிய காராண்கிழமை நிலம் ஒருமாவிற்கான வரிகளை விலக்கி அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு தானத்தார்க்குக் கண்டன் உதயஞ் செய்தானான காங்கேயர் அறிவுறுத்தியுள்ள தகவலைத் தருகிறது.

ஆங்கிரச ஆண்டு ஆனித்திங்கள் ஒன்பதாம் நாள் வெட்டப் பட்டுள்ள கல்வெட்டுக் கேரள சிங்க வளநாட்டுக் கண்டுகொண்ட மாணிக்க நாட்டார்க்குக் குன்றக்குடிக் கோயில் சுப்பிரமணிய சாமி காரியத்துத் தானத்தாரும் தலத்தாரும் தங்கள் ஊரான நடுவிக்கோட்டையை இறைவனுக்குத் தந்தபடியால், பஞ்சகாலத்தில் நடக்கும் திருப்பணி களுக்குக் குடிக்கு ஒரு பணம் அளிப்பதாக உறுதியளித்த தகவலைத் தருகிறது.

முதலிரண்டு குடைவரைப் பகுதிகளிலிருந்து புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் நான்கு கல்வெட்டுகளுள் ஓரளவுக்கு முழுமையாகக் கிடைத்திருக்கும் கல்வெட்டுகள் மூன்று. இவற்றுள் ஒன்று ஸ்ரீவல்லபதேவரின் பத்தாம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டுள்ளது. ஐநூற்றுவன் உய்யவந்தானான காங்கேயர் திருக்குன்றக்குடித் திருமலையுடைய மகாதேவருக்கு அளித்த நிலக்கொடையைப் பற்றிப் பேசும் இந்த ஆவணம் சோழன் தமிழனால் கையெழுத்திடப்பட்டுள்ளது.

மற்றொரு கல்வெட்டு சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவரின் பதினெட்டாம் ஆட்சியாண்டில் நிகழ்ந்த நில விற்பனையைப் பதிவுசெய்துள்ளது. நியமத்தில் தம் காணிப்பற்றில் சிலவற்றை மலைமண்டலத்து இடைக்கொட்டு அய்யப்ப காமனுக்கு கண்டன் உதயஞ் செய்தானான காங்கேயர் விற்ற நில விலை ஆவணமாய்த் திகழும் இக்கல்வெட்டின் பிற்பகுதி பெரிதும் சிதைந்துள்ளதால் இதன் முழுச் செய்தியையும் அறியக்கூடவில்லை.

மூன்றாம் கல்வெட்டு இரண்டாம் குடைவரையிலுள்ள முகப்பு முழுத் தூண்களின் போதிகைகளில் வெட்டப்பட்டுள்ளது. இதன் ஒரு பகுதியைத்தான் தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி இருபத்தாறில் முப்பத்தேழாம் கல்வெட்டின் பிற்பகுதியாகத் தவறுதலாகச் சேர்த்திருக்கிறார்கள். இக்கல்வெட்டின் தொடக்க வரிகளின் நடுப்பகுதி சேத்பாலருக்காக எடுக்கப்பட்டிருக்கும் சுவரில் சிக்கியுள்ளதாலும் கல்வெட்டுச் சிதைந்துள்ளதாலும் முழுச் செய்தியையும் அறியமுடியவில்லை. எனினும் சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டியரின் காலத்தில் சேத்ரபால பிள்ளையாருக்குத் திருவமுதிற்காகக் கண்டன் ஆளுடையானான கல்வாயில் நாடாள்வார் குறிப்பிட்ட அளவு நெல்லை முதலாக அளித்த தகவலைப் பெறமுடிகிறது.

முதற் கல்வெட்டின் தொடர்ச்சியாக அதே சுவரின் கீழ்ப்பகுதியில் மிகவும் சிதைந்த நிலையில் காணப்படும் நான்காம் கல்வெட்டு, சிங்கன் சூற்றி மூன்று மா நிலத்தைத் திருக்கோயிலுக்கு நீர்வார்த்துத் தந்த தகவலைத் தருகிறது. முருகன் கோயிலில் கண்டறியப்பட்ட ஐந்தாம் கல்வெட்டு உருவச் சிற்பம் ஒன்றின் பெயரைத் தருகிறது.

## குடைவரைகளின் காலம்

இங்குள்ள மூன்று குடைவரைகளும் ஏறத்தாழச் சமகாலத்தில் எடுக்கப்பட்டவையாகவே தோன்றுகின்றன. இரண்டாம் குடைவரையில் காணப்படும் வட்டெழுத்துக் கல்வெட்டின் எழுத்தமைதி, இக்குடைவரைகளின் அமைப்புமுறை, இங்குள்ள சிற்பங்களின் கலை அமைதி ஆகிய மூன்றும் இக்குடைவரைகளின் காலத்தை ஏறத்தாழக் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் இருத்துகின்றன.

## பதிப்பும் இருப்பும்

குடைவரைகளைப் பற்றிய கட்டுரையாக இருந்தபோதும் முழுமை கருதி இவ்வளாகத்திலிருந்து அனைத்துக் கல்வெட்டுகளுமே களஆய்வுகளின்போது படித்தாயப்பட்டன. அது போழ்து பதிப்பிக்கப் பட்டிருக்கும் தகவல்களில் உள்ள சில முரண்பாடுகளை அறியமுடிந்தது. எழுத்துக்கள், சொற்கள் என்றில்லாமல் பதிப்பிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டுப் பாடங்களின் வரித் தொடக்கங்கள், முடிவுகள்கூட மாறியிருப்பது கண்டறியப்பட்டது. சில கல்வெட்டுகள் காணப்படும் இடங்கள் மாற்றித் தரப்பட்டுள்ளன. சில கல்வெட்டுகளில் படிக்கும் நிலையிலுள்ள வரிகள் கூடத் தொகுதிகள் வெளியிடப்பட்டிருக்கும் பாடங்களில் புள்ளிகளால் நிரப்பப்பட்டுள்ளன.[57]

இரண்டு வெவ்வேறு கல்வெட்டுகளை, அவை தொடர்பின்றி இருந்தபோதும், ஒரே கல்வெட்டாக்கி வெளியிட்டிருக்கும் நிலையும் இரண்டு கல்வெட்டுகளின் தொடர்ச்சிகள் விடுபட்டு அரைகுறையாகவே அவை வெளியிடப்பட்டிருக்கும் நிலையும் ஆய்வின்போது தெரியவந்தன[57].

(தொடரும்)

# "அருளாலய பாலம்"

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி -9)

**வெண்கலிப்பா**

*சேதுவை மேடுறுத்திச் சீர்வீதி சமைப்பமென*
*ஓதுபுகழ் பாரதியின் ஓங்கார நாதந்தான்*
*பாரத நாடெங்கும் பரபரப்பாய் முழங்குகையில்*
*நாரத நாடகந்தான் அரங்கேறத் துடிக்கிறது!*
*மான்கேட்ட சீதை மயக்கத்தைத் தெளிவிக்க*
*மான்பின்னே தொடர்ந்திட்ட மால்ராமன் மயங்கியதாய்*
*அண்ணி அனுப்ப அருந்தொண்டன் இலக்குமணன்*
*மண்ணிலே போட்டிட்ட மாகோட்டைத் தாண்டிய*
*சீதையால் வந்திட்ட சீர்கேட்டை எல்லோரும்*
*ஓதுவர் ஓயாமல் இலக்குமணக் கோடென்று!*
*ஆங்கதுபோல் ஈண்டுநம் நாட்டில் எழுந்துள்ள*
*தாங்கரும் உள்ளத்துக் கருத்தை அறிந்திடுவோம்!*
*பால்திரிந்தால் தயிராகும்! தயிர்திரிந்தால் மோராகும்!*
*பால்வெள்ளை மோர்திரிந்தால் வெண்ணெய்யாம்!*
*வெண்ணெய்யை*
*உருக்கினால் நெய்யாகும்! நெய்யுமே உண்பதற்காம்!*
*பெருக்கமுறும் திரிபைப்போல் பெருந்தேவி சீதையுமே*
*இலக்குமணப் பெருங்கோட்டைத் தாண்டியதால் காமக்*
*கலக்கமுடன் வந்த இராவணனின் கதைமுடிக்கும்*
*அளவிற்குத் தீமைகளை அழித்திட்ட இராமன்*
*உளமாரக் கட்டிய பாலத்தை அழிக்காமல்*
*பராமரிக்க வேண்டுமென்றும் இடிப்பது பாவமென்றும்*
*மராமர அம்பாக மாறிமாறித் துளைத்துப்*
*பகர்கின்ற பலரின் கருத்தினைப் பார்த்தாலே*
*"அகன்றிட்ட அருங்கடலை ஆழப் படுத்தித்தான்*
*சேது சமுத்திரத் திட்டத்தை நிறைவேற்றத்*
*தோதா?" எனக்கேட்கும் தொய்வான வாதம்நம்*
*காதில் தொனிக்கிறது! கன்னித் தமிழ்நாட்டின்*
*பாதிப்பை உணராத பலபேரின் கருத்தை*
*ஒதுக்கி உணரத் தலைப்பட்டால் அந்தோ*
*செதுக்கிய சிற்பத்தின் சிறப்பைப்போல் சிலதெரியும்!*
*மறத்தமிழ்க் காப்பியமாம் சிலப்பதி காரத்தில்*

சிறப்பாகச் சொல்கின்ற சீறுகடல் கோளாலே
பன்மலையின் அடுக்கங்கள் பாழ்பட்டு மூழ்கிய
சின்னங்கள் கோடாகத் தெரிவதெனக் கொண்டிட்டால்
பகுத்தறிவுக் கொவ்வாத கருத்தாக இருக்காது!
தகுமதற்குச் சான்றாக மற்றொன்றைக் கூறிடலாம்!
கடல்கோளால் அழிந்திட்ட காவிரிப்பூம் பட்டினத்துக்
கடலில் இடிபாடு கட்டிடங்கள் உள்ளதாகக்
கப்பல்கள் இன்றுமே தள்ளியே செல்வதுடன்
உப்பள மீனவரும் வெகுதூரம் தள்ளியே
மீன்பிடித்து வாழ்கின்ற நிகழ்வாழ்வை அறிந்திட்டால்
ஏனிதுபோல் பன்மலையின் அடுக்கத் தொடர்ச்சிகள்
கோடாகத் தெரியுதெனக் கொள்ளமுடி யாதோதான்?
கோடென்றால் நெடுங்கோடா? மலையென்ற பொருளதற்கு!
கோடான கோடி குடிபடை மக்களெலாம்
கோடான மலைத்தொடரில் வாழுகையில் கடல்கோளால்
மூழ்கி மடிந்தாலும் மறையாத மலைமுகட்டைத்
தாழ்சடை ராமன் தரைப்பாலக் கோடென்று
கோடாகக் கிளர்த்தல் பொருந்துமா? நம்கேள்வி
கேடாமா? ஆதலால் ஆழ்கடலில் மூழ்கிய
பன்மலையின் தொடரடுக்குப் பளபளப்ப தல்லாமல்
முன்ராமன் கட்டிய பாலம் எனக்கூறல்
குதிரைக் கிருகொம் பிருப்பதெனக் கூறும்
அதிசயமாய் ஆவதன்றி அணுவளவும் உண்மையிலை!
ஆதலினால் ஆழ்கடலில் தோன்றும் மலைக்கோடு
பாதக மாயிருந்தால் பாழ்படுத்தல் பிழையாமோ?
தடையில்லா வாணிபம் தாவுகடல் வழியாக
முடையின்றிச் செய்ய முனைகின்ற வேளையிலே
நுனிமரம் ஏறி அடிமரம் வெட்டுதல்போல்
நனியில்லா வாறாக நாளும் அறிக்கைவிட்டு,
அழும்புதான் செய்கின்றார்! அப்படித்தான் அக்கோடு
தழும்பாகத் தண்ணீரில் இருப்பதினால் என்னபயன்?
பாட்டனார் வைத்தமரம் என்பதற்காய் பேரனும்
வீட்டுக் குதவிடும் மாமரத்தைப் பலகையாக
அறுத்துவீடு கட்டாமல் குடிசைக்குள் வாழ்வதுதான்
குறுகுறுத்த வாழ்வன்றோ? முன்னேற்றம் காணாமல்!
ஆதலினால் நம்கப்பல் இலங்கையினைச் சுற்றியே

ஓதமிகு மேலைக் கடலில் பயணித்து
செல்வதற்காம் காலக் கழிவெல்லாம் இல்லாமல்
செல்வமிகும் சிக்கனமாய் செல்லத் துணிகையிலே
வங்கத்து வாணிபந்தான் வண்டமிழர்க் கெந்நாளும்
தங்கப் புதையலாய் தாங்குபுகழ் கொள்ளாதோ?
இருந்தாலும் ஊது குழலாலே சிறுநெருப்பைப்
பெருந்தணலாய் ஆக்குவார் பேசாமல் பேசியே
சேது சமுத்திரத் திட்டத்தைத் தான்முடக்கிச்
சேதாரப் படுத்திச் சிலபோது குளிர்காய
இராமர்பா லத்தை இடிக்கப்ப டாதென்றே
வரால்மீனாய்த் துள்ளியே வில்லங்கம் செய்வோரை
ஒன்றுகேட்க விழைகின்றேன்! சீதையை மீட்டிட
அன்றங்கே குரங்கினக் கூட்ட உதவியுடன்
கடலையே அடக்கிக் கடற்பாலம் போட்டவன்
கடற்கோள் வரும்போது, அதையடக்கி அழிக்காமல்
இருக்கவே செய்திருந்தால் இன்று இலங்கையுமே
நெருக்கமுடன் இருந்திருக்கும்! சிங்களத் தீவுக்கோர்
பாலமமைப் போமென்று பாரதிதான் பின்னாளில்
பாடாமல் இருந்திருப்பார்! மேலும் உணரக்
கடற்பாலம் இருந்திருந்தால் கலக்கமுறும் இலங்கை
அடலேறாம் தமிழர்கள் அல்லலுறப் பார்ப்போமா!
ஆதலால் எல்லா வகையாலும் சிந்தித்தால்
மோதல்கள் இல்லாத படியாக முத்தமிழ்
நாட்டின் நலங்கருதி நெடுநாள் தமிழர்கள்
தேட்டமுடன் காத்திருந்து பெற்றிட்ட திட்டத்தை
அரசிய லாக்கி அவலத்தைச் செய்யாமல்
உரசலின்றி ஒருகுரல் ஓங்கி ஒலித்திடச்
செய்வதுதான் எல்லார்க்கும் ஏற்றதாம் என்றேநான்
வெய்யிலில் வந்த களைப்பிற்காய் மரத்தடியில்
தூங்கிய தூக்கத்தில் கண்டபகற் கனவில்தான்
தாங்கிய காவித் துவராடை உடையவராய்
வாய்மலர்ந்தார் ஒருவார்த்தை! "நினைப்புசரி, என்றாலும்
தாய்நாட்டின் நலங்கருதி நம்நாட்டில் உள்ள
அரசியலார் மட்டுமின்றி அங்குமிங்கும் பக்தி
உரசலின்றி வாழ்கின்ற மதவாதப் பேர்வழிகள்
இங்கொன்றாய்க் கூடி இருகுரலாய் இல்லாமல்

பொங்கும் ஒருகுரலாய் ஒலிப்பதற்கு நாமுமே
பாலந்தான் இல்லாத பான்மைக்குப் பலவான
சீலமிகு சாட்சியையே, புராணம் இதிகாசம்
சங்க இலக்கியச் சார்பான வரலாறு
பொங்கிட்ட கடல்கோளின் பூகோளச் சரித்திரமாய்த்
திரட்டிக் கொடுத்திட்டால் இராமரின் பாலமென
மிரட்டும் கருத்துக்கள் மெலிந்து நலிவதுடன்
தவலரும் ஓர்கருத்தால் தகர்த்தும் விடலாகும்!
பவளப் படிவப் பெரும்பாறை அடுக்கென்று
புவியியல் மாற்றத்தால் பூமிக் கடியில்
குவியல் குவியலாய் கூட்டமான கோடாக
நின்றதெனக் கூறியும் நின்ஐயம் தவிர்த்திடலாம்!"
என்று விளம்பிய வித்தகரின் வடிவத்தை
எங்கே எனப்பார்த்தேன்? அருளா வயபாலப்
பங்காகப் பளிச்சிட்ட அடிகள் பெருமானின்
சங்காத்தம் வேண்டினேன் சற்று!

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

# "கலைமாமணி" விருது பெற்ற இசையமைப்பாளர், நெல்லை ஆ. சுப்பிரமணியன், ஓர் "இசைப்பாலம்"

நாட்டுப்பற்று - நாட்டு ஒருமைப்பாடு - குடும்ப நலம் - மாதர் நலம் - தீண்டாமை ஒழிப்பு - வரதட்சணை ஒழிப்பு - சிக்கனம் - சிறு சேமிப்பு - கண்தானம் - இரத்ததானம் - சுற்றுப்புறப் பராமரிப்பு - எய்ட்ஸ் விழிப்பு - மதுவிலக்கு - கிராம முன்னேற்றம் - கூட்டுறவு சர்வமத நல்லிணக்கம் - பெண் கல்வி - அறிவொளி இயக்கம் - மரம் வளர்ப்பு - மழை நீர் சேமிப்பு - இந்த இருபது தலைப்புகளும், சமுதாய நலக் கருத்துக்களைக் கொண்ட இசைப்பாடல்களாக உருவாக்குவதற்கு கருவாக அமைந்தவை.

அன்று இந்திராகாந்தி ஆட்சி காலத்தில் "20 அம்ச திட்டம்" கிராமங்கள் வரையிலும் பரப்பப்பட்டிருந்தாலும், மக்களைப் போதுமான அளவு ஈர்க்கவில்லை. அதை நிவர்த்திக்கும் வகையில் மேற்கண்ட சமுதாய நலக்கருத்துப்பாடல்களை எழுதச் செய்து, தமது இசை அமைப்பில் திருச்சி மற்றும் ஏழு வானொலி நிலையங்களிலும் ஒலி பரப்பச் செய்திருக்கிறார் நெல்லை ஆ. சுப்பிரமணியன்.

திருச்சி - தஞ்சை - மதுரை - நெல்லை வானொலி நேயர்களுக்கு "நெல்லை" என்றே அறிமுகமானவர்.

"சிவகாமியின் சபதம்" "ரமண தீபம்" "இரட்சண்ய யாத்ரிகம்" முதலான இசைத் தொடர்கள், இசை நாடகங்கள், இசைச்சித்திரங்கள் முதலானவை இவரது இசையமைப்பில் சிறப்பு பெற்றன. குறிப்பாக, சார்க் மாநாட்டு அங்கங்களான ஆறு நாடுகளிலிலுள்ள வானொலி நிலையங்களில் ஏககாலத்தில் (15.10.1989) ஒலிபரப்பான A. சுப்பிரமணியனும் இவரும் தயாரித்த "தொட்டில் முதல் தொட்டில் வரை" எனும் கிராமீய இசைச் சித்திரம் இவரது இசையமைப்பிற்கு சிறப்பு சேர்த்தது.

துகிலி சுப்பிரமணியத்துடன் இணைந்து, 30வித கிராமீய வாத்தியங்களைக் கொண்டு தயாரித்த "கிராமத்து வாத்தியங்கள்" என்ற நிகழ்ச்சி பல இசைச் சித்திரங்களில் ஒன்று.

200 தியாகராஜ கீர்த்தனைகள், பன்னிருதிருமுறைகள், திருப்புகழ் முதலானவற்றிற்கு விளக்கமளித்த நெல்லை, திருக்குறளுக்கு 133 இராகங்களில் இசையமைத்துள்ளார். "மணிமேகலை" காப்பியத்தில் தேர்ந்தெடுத்த பாடல்களுக்கு இவர் சுரப்படுத்திய நூல், தமிழக அரசால் வெளிவந்துள்ளது.

தமது வானொலிப் பணிக்காலத்தில் தமிழிசையை வலியப் பொறுப்பேற்று, 60க்கு மேற்பட்ட பழம்பாடலாசிரியர்களின் தொன்மையான பாடல்களை ஒலிபரப்பச் செய்தது இவரது இசைத்தொண்டுகளில் குறிப்பிடத்தக்கது.

தமிழக அரசின் "கலைமாமணி" உள்ளிட்ட 18 விருதுகளைப் பெற்று அகவை 70ஐக் கடந்த நெல்லை, தொடக்கத்தில் குறிப்பிட்ட சமுதாய நலக் கருத்துக்களைக் கொண்ட பாடல்களை, சேர்ந்திசையாக பலருக்கும் பயிற்றுவித்து ஓர் "இசைப்பாலமாக" விளங்குவதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறார்.

ஒரு பெரிய பாம்பு; சிறிய பாம்பை விழுங்குகிறது. சிறிய பாம்பு, அதனினும் சிறிய தேரையை விழுங்குகிறது. தேரை, அதனினும் சிறிய பூச்சிகளை விழுங்குகிறது. இவை எங்கும், எல்லா இடத்திலும் வலிமையின்மையுடையன படும் அவதிக்கு எடுத்துக்காட்டு! பட்டினத்தடிகள் ஏன் இதைக் கூறுகிறார்? ஓர் உண்மையை விளக்க முற்படுகிறார். பாம்பு தற்காப்புக்காகவே கடிக்கும். வலிந்து சென்று கடிக்காது. வலிந்து தீமை செய்தல் மனிதனைத் தவிர வேறு எந்த உயிரினத்திற்கும் இல்லை. பாம்பைத் துன்புறுத்தாதார், பாம்பினாலும் துன்புறுத்தப்பட மாட்டார். "சான்றோர் அவைப்படின் பாம்பும் உய்யும்" என்பது கலித்தொகை. மனிதர்கள் தமக்குத் தீமை செய்யாதார் மாட்டும் தீமை செய்கின்றனர். ஏன்? அவர்களுக்கு நன்மை செய்தாருக்கேகூடத் தீமை செய்கின்றனர்.

மனிதர்கள் மேற்கொண்டு ஒழுக வேண்டிய அறத்திற் சிறந்தவை - துன்புறுத்தாமை, கொல்லாமை ஆகிய அறங்களாம். இதனை அகிம்சையென்று அண்ணல் காந்தியடிகள் கூறினார்.

**- அருள்நெறித்தந்தை**

# நேற்று, நாளை, இன்று!

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

கடந்துவிட்ட காலத்தை, இழப்பை எண்ணிக்
காலமெல்லாம் கவலையுறல் சரியா? தூரம்
நடந்துவிட்ட கடிகார நொடிமுள் மீண்டும்
நமக்காகத் திரும்பியிங்கே வருமா? ஓடி
விடைபெற்ற "நேற்றையநாள்" என்ப தென்ன?
"வேகின்ற தீயின்வாய் மல"ரே யன்றோ?
படமானோர் நடமாட வருதல் ஏது?
பயணித்த நேற்றையநாள் மீள்வ துண்டா?

நாளைநல்ல வேளைவரும் என்றே தூங்கி
நாம் கனவில் மிதப்பதுவும் சரியா? நுட்ப
மூளைக்கே விடுமுறையை அளித்து விட்டு
முடங்கியிங்கே கிடப்பதுவும் முறையா? சொன்னால்
"நாளை"என்ப தென்ன?அது "மதில்மேல் சேவல்";
நம்பக்கம் குதிக்குமென்ற உறுதி உண்டா?
"வாளை"யொன்று நாளைவரும் என்றே கால்முன்
வந்தநதிக் "கெண்டை"யினை விடுதல் நன்றா?

இன்றிந்த நிமிடத்தை, நொடியை நாமும்
இன்பத்தில் மூழ்கடிப்போம்; சூழ்ந்தோர்க் கெல்லாம்
நன்றான உதவிகளைச் செய்வோம்; செய்து
நாம் மகிழ்வோம்; அனைவரையும் மகிழச் செய்வோம்!
"இன்றைய நாள்" என்பதென்ன? "எதிரே காணும்
இனிக்கின்ற மாங்கனி"யே யன்றோ? இன்றே
தின்றுசுவைத் திடமறந்தால் நாளை அந்தத்
தீங்கனியும் அழுகிவிடும்; மறந்தி டாதீர்!



# தஞ்சை குறளடிகளாரின் இரண்டாம் ஆண்டு நினைவுநாள்

(பேராசிரியர். டாக்டர். **பி.கி. சிவராமன்**)
தஞ்சை உலகத் திருக்குறள் பேரவை



முதன்முதலாக உலகச்சிந்தனையை உருவாக்கியதன் மூலம் தமிழ்மொழியை உலக அரங்கில் அறிமுகம் செய்து வைத்த பெருமை வள்ளுவருக்கு உண்டு.

முதன்முதலாக வள்ளுவச்சிந்தனையை தஞ்சையில் விதைத்து, வளர்த்து விருட்சமாக்கிய பெருமை குறளடிகளே! உமக்கு உண்டு.

தாழாது உஞற்றும் தலைமகனே! நீ வள்ளுவருக்கு வாழ்க்கைப்பட்டவன். சொல்லிய வண்ணம் செயல் உனது விலாசம்.

சுடும் வரைதான் நெருப்பு. சுழலும் வரைதான் பூமி. உழைக்கும் வரைதான் மனிதன் என்பதில் நீ உறுதியாக இருந்தாய். அதனால்தான் தஞ்சை உலகத்திருக்குறள் பேரவை உன்னை நிரந்தரச் செயலராக்கி மகிழ்ந்தது.

நீயோ திங்கள்தோறும் திருக்குறளால் ஞாலம் துலங்க ஞானதீபம் ஏற்றினாய். கட்டுப்பாடு உனது தெய்வமொழி.

*உனது சேவையால்*
*அறிவை ஞானமாக்கினாய்!*
*பதவியை சேவையாக்கினாய்!*
*பணத்தைப் பகிர்ந்தாய்!*
*புகழை ஜீரணித்தாய்!*

*மதவெறியால் மனித நேயத்தை மறந்த எங்களை*
*ஆண்டுதோறும் எங்கள் மனதைச் சுத்தமாக்கி*
*மத நல்லிணக்கம் செய்து வைத்தாய்*

*மோட்சமாகிய வீடு தேடுகிற வெறியில்*
*அறம், பொருள், இன்பத்தை மிதித்து ஓடிய*
*எங்களை தடுத்து நிறுத்திய*
*பெரியாரின் வழித் தோன்றலே!*

*நீ முரட்டு நாத்திகனுமல்ல*
*வரட்டு ஆத்திகனுமல்ல*
*இரண்டுக்கும் இடைப்பட்டவன்.*

தமிழுக்காக வாழ்ந்தவன் நீ! தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடினால் தமிழ்த்தாய் பெருமிதத்தோடு தலை நிமிர்வாள்.

தென்னங்காற்றை சுவாசித்து, தென்னிள நீரை அருந்தி, "தித்திக்கும் முத்துக்கள்" என்ற நூலைத்தந்து திருக்குறள் பேரவையை வளர்த்த தென்னங்குடி பெருமகனே!

அன்று நீ விரும்பியபடி திருக்குறள் பேரவை இளங்குமரனாரின் "திருக்குறளும் வாழ்வியலும்" என்ற நூலையும் உனது நினைவின் அடையாளமாக பாவலரேறுவின் "திருக்குறள் தெளிவுரையையும்" வெளியிட்டு மகிழ்கிறது.

காலத்தால் எதையும் கணக்காகச் செய்ததால் பெருந்தலைவர்கள் கூட உன் பேரவைக்கு காலம் தவறாது ஓடி வந்தார்கள். பசுவின் பால் சுரக்கும் காம்பு போல் முப்பால் சுரந்தவனே!

இந்த உலகில் மலர்களுக்குத் தான் முதல் மரியாதை. நீயோ என்றும் வேராக இருக்கவே விரும்பினாய். நீ வெற்றியின் சிகரத்தில் இருந்தபோது கூட நாங்கள் எவ்வளவு வற்புறுத்தியும் நாடுபோற்றும் வள்ளுவ விருதை நீ நாடவில்லையே! வள்ளுவக்குடும்பத்தைப் பேணி, வள்ளுவநெறியை வளர்த்து, வள்ளுவத்தை வாழ்க்கையாக்கியதே நீ பெற்ற சிறந்த விருது.

பல நாட்கள் பழகிய நண்பர், கடிதம் போடாமலே வந்து கதவைத் தட்டுவது போல திடீரென என் வீட்டு வாசலில் நிற்பாய், அப்பொழுது தான் என் பிறந்த நாள் எனக்கு நினைவுக்கு வரும். நான் நெகிழ்ந்து போவேன். உன்னால் திருக்குறள் பேரவை திருவள்ளுவக் குடும்பம் ஆனது.

ஒரே நேரத்தில் சிறுமையைக் கண்டால் சீறுவதும், செம்மையைக் கண்டால் சிரித்து மகிழ்வதும், குழந்தை உள்ளம் கொண்ட உன்னால் தான் முடியும். உன் கோப நிமிடங்கள் எனக்குப் பிடிக்கும். ஏனெனில் அவை குணமெனும் குன்றேறி நின்றாரின் கோபம்.

புண்படா உடம்பும், புரைபடா மனமும், பொய்படா ஒழுக்கமும் பொருந்திய வள்ளுவமே! நீ எத்தனை எத்தனைக் கனவுகள் கண்டாய்!

1. தஞ்சையில் திருக்குறள் பேரவைக்கென்று ஒரு அரங்கம். அதில் ஒரு தலைசிறந்த நூலகம்.

2. திருவள்ளுவருக்கு ஒரு சிலை.
3. தெய்வத்திருமறை தேசிய நூல் ஆக முயற்சி.
4. வாரம்தோறும் வள்ளுவர் நெறிமுழக்கம்.
5. திருவள்ளுவர் கருத்தரங்கம்.

இதில் வாரம்தோறும் பொதுமக்களுக்கு தஞ்சையில் திருக்குறள் வகுப்பு நடக்கிறது. பேரா.கு.வே. பாலசுப்பிரமணியன் இதுவரை 40 அதிகாரங்களை நடத்தி சாதனை புரிந்து இருக்கிறார். உன் கனவு நினைவாகும் காலமிது. சாகித்யா அகாடெமியின் துணையோடு, பாரத் கல்லூரி உதவ, திருக்குறள் பேரவை உன் வழித்தோன்றல் பழமாறவர்மன் தலைமையில் செப்டம்பர் 2007ல் மாபெரும் கருத்தரங்கம் நடக்க இருக்கிறது.

*இது தமிழ் அரசாளும் காலம்*
*தமிழ் பாரதத்திற்கு வழிகாட்டும் காலம்,*
*தமிழ்மறை விரைவில் உலகப் பொதுமறையாகும் காலம்*
*குறளடிகளே! உம் கனவு நினைவாகும் காலம்!*
*வாழ்க நும் புகழ்! வளர்க குறள் நெறி!*
*“எல்லாம் செயல்கூடும் என் ஆணை அம்பலத்தே”*

# ஒளிவடிவமே வழிபாட்டுக்கு உகந்த வடிவம்

*(தேவகோட்டை சன்மார்க்க சங்கத்தில் அன்னை சிவகாமி நினைவு தியான மண்டபத்தைத் திறந்து வைத்துப் தவத்திரு பொன்னம்பல அடிகள் உரை!)*

தேவகோட்டை கல்விச் சேவுகர் சேவு. அண்ணாமலையாரின் குடும்பத்தின் சார்பாக, திருமதி அண. சிவகாமி ஆச்சி அவர்களின் நினைவில், அண்ணாமலையார் - சிவகாமி ஆச்சி இவர்களது புதல்வரும் தேவகோட்டை சேவுகன் - அண்ணாமலை கல்லூரியின் தலைவருமான திரு சேவு.அ. லெட்சுமணன் அவர்கள் உருவாக்கிய தியான வழிபாட்டு மண்டபத்தை, 17.4.07 ஆம் நாள் மாலை, தவத்திரு பொன்னம்பல அடிகள் திறந்துவைத்து ஆசிஉரை வழங்கினார்கள்.

தனது அன்னையின் பெயரில் தியான வழிபாட்டு மண்டபத்தை உருவாக்கிய திரு லெட்சுமணன் அவர்கள் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பது நமது தமிழ்நெறிவழக்கு. அத்தகைய நெறியைப் போற்றி இப்போது எங்கள் அன்னையின் பெயரில், அவர்களது நினைவாக தியான வழிபாட்டு மண்டபம் உருவாக்கி உள்ளோம்" என்று சுட்டிக்காட்டி வரவேற்புரை வழங்கினார். தலைமைதாங்கிய திருப்பணிச்செம்மல் இளைய ஜமீன்தார் சோம.நாராயணன் செட்டியார் அவர்களின் தலைமை உரையைத் தொடர்ந்து தவத்திரு பொன்னம்ப அடிகள் "வழிபாட்டு முறைகளில், தியான நெறிகளில் ஒளிவடிவமே மிகவும் உகந்த வடிவம், உலகம் முழுமைக்கும் உரிய வடிவம்" என்று விளக்கிப் பேசினார்கள்.

"கடவுளுக்கும் ஆலயம், கல்விக்கும் ஆலயம்" - என்று நமது மதிப்பிற்குரிய நகரத்தார் பெருமக்கள் காலம் காலமாகச் செய்துவரும் தொண்டு அளப்பரிய தொண்டு ஆகும். நமது மதிப்பிற்குரிய தமிழ் வள்ளல் மெய்யப்பச் செட்டியார் முதல் இன்று வரை அந்தக் குடும்பம் செய்து வரும் கடவுள் பணிக்கும் கல்விப் பணிக்கும் எல்லையே சொல்ல முடியாது. இனியும் இவ்விரு பணிகளும் தொடர்ந்து செவ்வனே அமையும் என்பதில் நமக்கு ஐயமில்லை. உயிருக்கு, அதாவது ஆன்மாவுக்கு உணவு ஆன்மிகம்தான் என்பதை அமரர் சேவு.அண்ணாமலை செட்டியார் அவர்கள் உணர்ந்து பல ஆன்மிகப்

பணிகளை ஆற்றிவந்துள்ளார்கள். அந்த வழியைப் பின்பற்றி இப்போது தேவகோட்டை சன்மார்க்க சங்கத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருக்கிற சேவு.அ. லெட்சுமணன் அவர்களும், குடும்பத்தாரும் ஒரு தியான - வழிபாட்டு மண்டபத்தை உருவாக்கி வழங்கியிருப்பது சாலச் சிறந்த பணி ஆகும். நமது தெய்வீகப் பாரம்பரியம் இறைவன் எல்லா இடத்திலும் இருக்கிறான், எல்லை கடந்து நிற்கிறான் என்பதை நமக்கு உணர்த்தியிருக்கிறது. நம்மைச் சுற்றிலும் நாம் காண்கிற அனைத்துமே இறைவனின் அடையாளங்களே ஆகும்! எல்லாக் காலமும் அவனே! எல்லாக் கோலமும் அவனே! இதைத்தான் நமது அருள்நெறியாளர்கள் நமக்கு உணர்த்தியிருக்கிறார்கள்.

"பண்ணில் ஓசை, பழத்தினில் இன்சுவை,
பெண்ணொடு ஆண் என்று பேசற்கு அரியவன்;
வண்ணம் இல்லி; வடிவுவேறு ஆயவன்;
கண்ணில் உள்மணி, கச்சி ஏகம்பனே" - என்று

நம்முடைய அப்பர்சுவாமிகள் பாடி அருளினார்கள்.

"இருநிலனாய், தீயாகி நீரும் ஆகி,
இயமானனாய், எறியும் காற்றும் ஆகி,
அருநிலைய திங்களாய், ஞாயிறு ஆகி,
ஆகாசமாய் அட்ட மூர்த்தி ஆகிப்

பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறர் உருவும் தம்உருவும் தாமே ஆகி,
நெருநலையாய், இன்றாகி, நாளை ஆகி,
நிமிர் புன்சடை அடிகள் நின்றவாறே"

- என்ற திருத்தாண்டகப் பாசுரத்தையும் நினைப்பது நமது கடப்பாடு ஆகும்.

"ஏகன், அநேகன்", என்றும்,
"விண்நிறைந்து, மண்நிறைந்து,
மிக்காய், விளங்குஒளியாய்
எண்ணிறைந்து, எல்லை இலாதானே"

- எனவரும் மணிவாசகரின் திருவாசகங்களையும் நாம் நினைந்து பார்க்கிறோம்.

இத்தகைய விரிந்தும் பரந்தும் நிற்கும் பரம்பொருளை எப்படி நம் உள்ளத்துக்குள் கொணர்ந்து நிறுத்துவது? அதற்கும் நம்முடைய அருளாளர்களே வழியும் சொல்லியிருக்கிறார்கள்.

"மாசற்ற சோதி, மலர்ந்த மலர்ச்சுடரே" என்பார் மணிவாசகர்.

"மெய்உளே விளக்கை ஏற்றி
வேண்டளவு உயரத் தூண்டி"

என்பார் அப்பர் சுவாமிகள். இந்த ஒளி வழிபாட்டை அப்படியே ஏற்று மிக விரிவாகப் பாடியவர் நமது அருட்பெருஞ் ஜோதி வள்ளல் பெருமான் ஆவார்.

சிறிய பருவத்தில் ஒரு குழந்தைக்குத் தேவை பொம்மைகள்; ஆனால் அனுபவம் முதிர்ந்த வளர்ந்த பருவத்தில் பொம்மைகளும், விளையாட்டுப் பொருள்களும் பயன்படமாட்டா. அதுபோலவே நமக்கு முதிர்ந்த நிலையில் ஒளிவழிபாடும், தியானமும்தான் பயன்படும். முதிர்ந்த பருவத்தில் புற அடையாளங்கள் அவசியம் இல்லை. தமிழ்த்தென்றல் திரு.வி.க. போன்ற சான்றோர்கள் "உள்ஒளி" என்று குறிப்பிட்டு நமக்கு வழிகாட்டினார்கள். அந்த வழியில் நாமும், நமது இளைய சமுதாயத்தினரும் முன்னேறிச் செல்ல ஒளிவழிபாடும், அதற்கான மையங்களும் இன்று மிகவும் அவசியமாகின்றன. அகவழிபாடு என்ற ஒளி வழிபாடு, தியான வழிபாடு, மனத்தை ஒருமைப்படுத்துதல் என்ற நெறி வளருமானால் புறத்தே தோன்றித் துன்பம் தருகின்ற பேதங்கள், வேறுபாடுகள் மாய்ந்துவிடும். வள்ளல் பெருமான் பாடிய சீவகாருண்ணிய சமுதாயம் உருவாகும் காலம் வரும். அத்தகைய சமுதாயம் உருவாக, நமது லெட்சுமணன் குடும்பத்தார் உருவாக்கியுள்ள இந்தத் தியான வழிபாட்டு மண்டபம் பயன்படும் என்று நம்புகிறோம். இந்த மண்டபத்தை திரு. லெட்சுமணன் குடும்பத்தார் உருவாக்கிய மிகச் சிறந்த "அறக்கொடை, ஆன்மிகக் கொடை" என்று போற்றி மகிழ்கிறோம். திரு லெட்சுமணன் அவர்களும் திருமதி. லெட்சுமணன் அவர்களும் அடுத்த திங்களின்போது மணிவிழா காண்கிறார்கள். இந்த மாண்புமிக்க மணிவிழாத் தம்பதியருக்கு இப்போதே நம்முடைய நெஞ்சார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். திரு.லெட்சுமணன் அவர்களும் திருமதி. லெட்சுமணன் அவர்களும் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்திருந்து ஆன்மிகப் பணிகள் செய்ய முருகப்பெருமான் அருள்பாலிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்து இந்த மண்டபத்தைத் திறந்து வைத்து விடைபெறுகிறோம்.

(உரையின் செய்திச் சுருக்கம் : "மு.மு")

# அறிவியல் உறவும் – ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

கடல் வளம் சார்ந்த தொழில்களைப் பற்றியும். அதற்காக தவத்திரு அடிகளார் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சியைப் பற்றியும் பார்த்தோம்.

"டாடா யாதாவோகா" என்ற உலோக நிறுவனம் ஜாம்ஷெட்பூரில் உள்ளது. இது ஆலைகளுக்கு வேண்டிய வார்ப்புப் பொருட்களைத் தயாரிக்கிறது. அதில் அடிகளார் அவர்களுக்கும், நமக்கும் மிகவும் நெருங்கிய நண்பர் பாலசுப்பிரமணியன் என்பவர் அடிகளார் அவர்களை அங்கு வருமாறு அழைத்தார். அதே நிறுவனத்தில் முன்னாள் திட்டக்குழு தலைவர் திரு. BA. ஷெனாய் அவர்களின் மகன் திரு. கோகுல் வேலை பார்த்து வந்தார்.

டாடா நிறுவனம் ஜாம்ஷெட்பூர் பகுதிகளில் கிராம முன்னேற்றப் பணிகள் செய்து கொண்டிருந்தது. பயிற்சி மையங்கள் உற்பத்தி மையங்களாக்கப்பட்டு, வயது வந்தோர் கல்வி, சுற்றுப்புற சூழ்நிலை பாதுகாப்பு ஆகிய துறைகளில் மக்களுக்கு உதவி புரிந்து வந்தது. கிராமப்புற முன்னேற்றப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருக்கும் அடிகளார் அவர்களுக்கு இந்த பயணத்தின் மூலம் மேலும் சில விவரங்கள் கிடைக்கலாம் என்பது அவர்கள் எண்ணம்.

இந்தப் பயணத்தை ஏற்றுக் கொள்வதற்கு உந்துகோலாக, அடிகளார் முன் இந்தத் திட்டத்தை வைத்தோம். கல்கத்தாவில் உள்ள "மைய கண்ணாடி மற்றும் பீங்கான் ஆராய்ச்சி மையத்தைப்" (CGCRI) பார்வையிடலாம். நமது பகுதிக்கு உகந்த தொழில் நுட்பங்களை ஆய்வு செய்யலாம் என்று கூறப்பட்டது. உதாரணமாக "ஜிப்ஸத்தை" (கடல் உப்பு) பயன்படுத்தி பலகைகள் தயாரித்தல், கண்ணாடிகள் தயாரித்தல், பீங்கான்கள் தயாரித்தல் போன்ற பல தொழில் நுட்பங்கள் கருத்தில் கொள்ளப்பட்டன.

நாம் முன்பு கூறியபடி உப்பளங்களில் அதிகமாக ஜிப்ஸம் கிடைக்கிறது. இதற்கு ஒரு நல்ல விலை கிடைக்கப்பெறலாம். மானாமதுரையில் "மண்பாண்டங்கள் தொழில்" சிறப்பாக நடைபெறுகிறது. அதற்கு மேலும் மதிப்பூட்டப்பட்ட பொருட்கள்

தயாரிக்க வாய்ப்பு இருக்கலாம். கட்டிடங்களுக்கு வேண்டிய கண்ணாடிப் பலகைகள் தயாரிக்கலாம் என்ற சிந்தனைகள் தோன்றின.

ஜாம்ஷெட்பூர், கல்கத்தா பயணம் உறுதி செய்யப்பட்டது. விமானத்தின் மூலம் கல்கத்தா வழியாக ஜம்ஷெட்பூர் சென்று அடைந்தோம். திரு. செல்வராஜ் உடன் வந்திருந்தார். டாடா நிறுவனத்தின் விடுதியில் சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சுற்றியுள்ள கிராமங்களில் வளர்ச்சிப் பணிகள் நடந்து கொண்டிருக்கும் மையங்களுக்கு அழைத்துச் சென்றார்கள. பல பயிற்சி மையங்கள் நல்ல அடிப்படை வசதிகளுடன் நல்ல கட்டிடங்களில் செயல்பட்டன. அதே போன்று உற்பத்தி மையங்களும் இருந்தன. டாடா நிறுவனம் மரங்கள் வளர்ப்பதில் அதிகம் கவனம் செலுத்தி வந்தார்கள். நிறுவனத்தின் வளாகத்திலேயே கல்விக் கூடங்களும் அமைக்கப் பெற்று பணிபுரிபவர்களின் குழந்தைகளுக்கும், கிராமப்புற மக்களுக்கும் நல்ல தரமான கல்வி கிடைக்கச் செய்திருந்தார்கள். அடிகளார் அவர்களுக்கு அவை எல்லாம் பார்த்ததில் மிக்க மகிழ்ச்சி. ஏக்கமும் கூட, நிதி வசதி இருந்தால் நாமும் இந்த நிலையை அடையலாம் என்று கூறினார்கள்.

அன்று மாலையில் அங்குள்ள தமிழ்ச் சங்கத்தில் உரையாற்றினார்கள். ஜாம்ஷெட்பூரில் "தேசிய உலோக ஆய்வகம்" (CSIR) உள்ளது. கிராமப்புறத்திற்கு தேவையான தொழில் நுட்பங்கள் இல்லாததினால் அங்கு செல்லவில்லை. கல்கத்தாவை வந்தடைந்தோம்.

கல்கத்தாவில் உள்ள "மைய கண்ணாடி மற்றும் பீங்கான் ஆய்வகத்திற்கு" ச் சென்றோம். ஆய்வகத்தின் இயக்குநர் அவர்களுடனும், விஞ்ஞானிகளுடனும் ஏற்பாடு செய்திருந்த கலந்துரையாடலுக்குப் பிறகு ஆய்வுக் கூடங்களுக்குச் சென்று பல தொழில்நுட்பங்களைப் பற்றிய செய்திகளை அடிகளார் அவர்கள் கவனித்தார்கள்.

கண்ணாடி இழையும், ஜிப்சம் உப்பையும் அடிப்படையாகக் கொண்டு தயாரித்த பலகைகள் மீது அடிகளார் அவர்களின் கவனம் சென்றது. இராமநாதபுரத்தின் உப்பளங்களில் "ஜிப்ஸம்" அதிக அளவு இருந்தது என்று குறிப்பிட்டோம். அதைப் பயன்படுத்தி ஒரு தொழில் துவங்க திட்டமிட்டார்கள். விஞ்ஞானிகள் கடல் நீரிலிருந்து

கிடைக்கக்கூடிய ஜிப்ஸம் தூய்மைப்படுத்தியபிறகு பயன்படுத்த வேண்டியிருக்கும். ஆகையால் ஆய்வு செய்வதற்கு மாதிரி ஜிப்ஸம் அனுப்பக் கேட்டுக் கொண்டார்கள்.

இந்த ஆய்வகம் மண்பாண்டம் மற்றும் பீங்கான் சாமான்கள் தயாரிப்பதில் சில முன்னேற்ற வேலைகள் செய்து அதைப் பயனாளிகளிடத்திலேயே வியாபார ரீதியிலே தங்களுடைய வழிகாட்டுதலின் பேரில் நடத்தி வந்தார்கள். கிராமங்களுக்குச் சென்று அந்த தொழிற் கூடங்களைப் பார்த்து, தொழிலாளிகளிடம் கேட்டு தெரிந்து கொண்டார்கள்.

மானாமதுரையில் மண்பாண்ட வேலைகள் சிறப்பாக நடப்பது நாம் அறிவோம். அடிகளார் அவர்கள் ஆய்வகத்தின் விஞ்ஞானிகளுடன் கலந்து பேசி மண்பாண்டங்களுடன் பீங்கான் சாமான்களும் செய்ய முடியுமா என்று வினவினார்கள். அதற்கு விஞ்ஞானிகள் களிமண் மாதிரிகளை அனுப்பி வைக்கச் சொன்னார்கள்.

பலவிதமான கண்ணாடிகள் தயாரிக்கும் தொழில்களிலும் அடிகளார் அவர்கள் ஆர்வம் காட்டினார்கள். முதலீடு அதிகமாக இருந்தாலும் நீரின் தேவையான அளவு அதிகம் இருந்தாலும் இத்திட்டத்தில் உடனடியாக செயல்பட அடிகளார் அவர்கள் விரும்பவில்லை.

குன்றக்குடி திரும்பியதுமே அடிகளார் அவர்கள் சாக்குப் பைகளில் ஜிப்ஸம், மானாமதுரை களிமண், நாச்சியார்புரம் அருகே கிடைக்கக் கூடிய வெள்ளை நிறக் களிமண் (White Clay) ஆகியவற்றை ஆய்விற்கு அனுப்பி வைத்தார்கள்.

ஆன்மீகத்திலும், சமுதாய முன்னேற்றத்திலும் மக்களை ஒன்று சேர்த்து பணிபுரிந்த அடிகளார் அவர்கள், மக்களின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வேண்டிய நவீன தொழில் நுட்பங்களைத் தேடி ஆய்வகம் தோறும் சென்று பார்த்து, மாவட்டத்தில் பல இடங்களிலும் தொழில்கள் துவங்க தம்முடைய சிந்தனையை செலுத்திக் கொண்டிருந்தார்கள்.

சென்றோம்! பார்த்தோம்! வந்தோம்! என்று இல்லாமல் தொடர்ந்து செயல்பாட்டில் ஈடுபட்டது குறிப்பிடத்தக்கது.

# சிந்தனை வட்டம்

வைகாசி விசாகப் பெருவிழா மாண்பைப் படமாகப் பார்த்து மகிழ்ந்திட்டேன். அந்த இதழில் ஓர் அற்புதம்! அதிசயம்! கண்டு கலங்கி மகிழ்ந்தேன்.இன்றும் ஒரு குங்கிலியக் கலையர் உள்ளார் என்பதுதான் அதிசயம். தாலியை வெலாக்கித் தங்க வேலாய்த் தங்கவேலுக்குத் தந்தது பார்த்து எவர்தான் கலங்கார்? ஒருவரை வாய்பேசவைத்த சண்முகநாதன் ஒருவருக்கு மகப்பேறளித்தது வரலாறாய் வடிவம் பெற்றுவிட்டது. என்னே சண்முகநாதனை நம்பினோர் பெறும்பயன்!

தாலியைத் தங்கவேலாய்த் தாம்செய் தளித்திட்ட
தாலிபாக்கி யத்தின்நல் தம்பதியை - வேலியாய்
சண்முக நாதன்தான் சத்தியமாய்க் காத்திட்டான்
கண்ணான வாரிசு தந்து

விரிந்த உறவே துறவெனக் கூறும்
விரிந்த பொருளை விளக்கி - விரிந்த
உலகோர்க் குணர்த்திய உத்தம அப்துல்
கலாமிற்காம் வாழ்த்து கனிவு!

வெற்றிவேல் பற்றிப் படித்ததும் மெய்சிலிர்த்தேன்!
பற்றிப் படர்ந்திட்ட நெஞ்சத்தால் - முற்றிலும்
நம்பிக்கை வைத்து நலங்கண்ட ராமசாமி
தம்பதிக்கு சொன்னேன் நல் வாழ்த்து!

செந்தமிழ் வாரிதியாம் செல்வக் கணபதியார்
நந்தமிழ் போற்றுறும் நாட்டரசால் - தந்த
கலைமா மணிவிருதால் கன்னித் தமிழ்க்கு
மலையானார் மேலும் பொலிந்து!

வேண்டுகோள் விட்ட கலைக்கோவர் தம்விருப்பம்
ஈண்டுநிறை வேற இனிதாகும்! - மீண்டும்
தமிழ்வர லாறு புதுக்குறும் பேற்றால்
அமிழ்தாகும் அன்னைத் தமிழ்!

- தமிழாகரர். **தெ. முருகசாமி.**

"ரீடர்ஸ் டைஜஸ்ட்" போன்று "மக்கள் சிந்தனையை கையில் வைத்திருப்பதே வாசகர்க்குப் பெருமை" எனும் உயர் நிலையை நம் இதழ் பெற்றுவருவது சிறப்பிற்குரியது.

மதுரை வாசகர் குறிப்பிட்டவாறு இதழில் முதற்கண் படிப்பது, தலையங்கத்தைத்தான். அது தான் மரபு. தவத்திரு அடிகளாரின் தலையங்கச் சொற்கள், "உண்மை - வெறும் புகழ்ச்சியில்லை" என்னுமாறு மனத்தே பதிய வைக்கின்றன. நம் குடியரசுத் தலைவரைப் பற்றிய குணநலன்கள் - உயர்வுகளை விவரித்த நயம், கீழ்க்காணும் குறள்களை நினைவூட்டியது!

"இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்"
"தோன்றலின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று"
"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற"
"நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது"
"உள்ளத்தார் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துளெல்லாம் உளன்"

மேலும் சில குறள்களுக்கு ஒப்ப இசைபட வாழ்பவர் அற்புதத் துறவி அப்துல்கலாம் அவர்கள். அத்தகைய நிறைமாமனிதர்க்கு மக்கள் சிந்தனை வாசகர்களும் வாழ்த்துகிறொம் வாழி பல்லாண்டெனெ.

- "கலைமாமணி" நெல்லை. **ஆ. சுப்பிரமணி**

# அறிவியலின் மறுபக்கம்

**(புலேந்திரன்)**

அறிவியலின் ஒரு பக்கம் - விண்ணை ஆய்ந்திட கலங்களை உருவாக்கிக் கொண்டிருக்கும் மனிதன்!

மறுபக்கம் - அவன் தன்னைத் தானே காத்துக் கொள்ள அறிந்திட இயலா நிலை!

இந்தக் கிரகத்திற்கு, இத்தனை நாட்களில் போய்ச் சேரலாம் என்று கணித்திடும் அறிவியலால், இவனது உயிர் இயல்பாக எப்போது நீங்கிடும் என்று கணித்திட முடியவில்லை!

விண்ணில் - இந்த நாளில், இத்தனை மணிக்கு, இது வெளிப்படும் என்று துல்லியமாகக் கணித்திடும் அறிவியலர்ல், இவனது உடலை இந்த நோய், இந்த நாளில் பற்றிடும் என்று கணித்திட முடியவில்லையே!

வெளிப்பட்ட நோய்களைப் போக்கிட, அந்நோய் பரவாதிருந்திட இவன் ஆய்வு செய்து, அதற்கான மருந்தினைக் கண்டுபிடித்து நிமிர்ந்திடும் போது - மற்றொரு புதிய நோய்! நேற்று "எயிட்சு!" இன்று "சார்சு!" நாளை என்ன நோய்?.... தானே வல்லவன் என்றும் பறைசாற்றிக்கொள்ளும் இந்த மனிதன், இவனது அறிவியலால் கூறிவிட முடியுமா?....

வயிற்று வலியா?... அறுவை, தையல்! கையில், காலில் "வார்ட்" என்னும் பருவா?... மின் தீய்ப்பு! புற்று நோயா?.... கொஞ்சம் கொஞ்சமாகத் தீய்த்து.... துண்டித்து.... இறுதிக் கட்டத்தில் இறப்பு! சாதாரணம் - தலைவலி. எல்லாத் தலைகளையும் போக்கிட இவனால் மருந்து கண்டுபிடித்திட முடிந்திருக்கிறதா?

அறிவியலின் ஒரு பக்கத்தில் இவன் விண் நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறான் என்றால், மறு பக்கத்தில் - தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்வது என்பது இவனது கையில் இல்லை என்பதே உண்மை! ஆம். சுருங்கச் சொன்னால் - அறிவியலின் முன்னேற்றத்தால் மனித உடலில் பழுதுபட்ட கண், இதயம், "கிட்னி" போன்ற உறுப்புகளுக்குப் பதிலாக இரவல் உறுப்புகளைப் பொருத்தி, "வெற்றி" என்று கூவிடும் இவனால், உயிரற்ற உடலுக்குள் இரவல் உயிர் வாங்கிச் செலுத்தி பழைய நிலையைக் கொடுத்திட முடியுமா? அல்லது இயக்கம் நின்று போன உடலை மீண்டும் இயக்கி முன்புபோல நடமாடச் செய்திடத்தான் முடியுமா?

நூலில் கட்டியுள்ள பட்டத்தைப் போல எப்படி, எப்படிப் பறந்தாலும், எதிர்பாராத துண்டிப்பு..... ஆம். இறுதி என்பது இவனது பிடியில் இல்லை என்பதே இன்றைய அறிவியலின் மறுபக்கம் என்பது மறுக்க முடியாததே!

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

## பழநி

## பரிமள விலாஸ்

# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தநாதன் சன்ஸ்**

**அடிவாரம், பழநி — 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி – 630 206
சிவகங்கை மாவட்டம்.

**MAKKAL CHINTHANAI - July 2007** **Price Rs. 5-00**

Date of Publication **20-07-2007**

**Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008**



பெறுநர்

திரு [illegible] அவர்கள்

கோவிலூர் [illegible]

கோவிலூர்

காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166